SRI K. SATTANATHA KARAYALAR : Imports?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The total arrivals from the Andhra Pradesh by rail during 1960 are 89,529·3 tons.

*Industrial Establishments (Administration).*

* 980 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தொழில் ஸ்தாபனங்களில் நிர்வாகத்தில் தொழிலாளர்கள் பங்குகொள்ளும் முறை அமுலில் கொண்டுவரப்பட்டுள்ளதா ?

(இ) எந்தெந்த ஸ்தாபனங்களில் ?

(உ) இல்லையென்றால், காரணமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) ஆம்.

(இ) தனியார் துறையில் சென்னை சிம்ஸன் குரூப் கம்பெனிகளில் அமுல் நடத்தப்படுகிறது.

(உ) இந்தக் கேள்வி எழவில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இது போன்று பொதுத் துறையில் நடைபெறுகிற ஸ்தாபனங்களிலே என் இந்த் முறையைக் கொண்டுவர முடியவில்லை ? அதற்கு என் முயற்சி எடுக்கக் கூடாது ? இம்மாதிரி நடவடிக்கை எடுக்க உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த முறையை அமுல் நடத்த வேண்டுமானால், அந்த ஸ்தாபனத்தில் ஒரே யூனியன் இருக்க வேண்டும் ; அப்படியிருக்கும் ஒரே யூனியனில் 80 சதவிகித ஊழியர்கள் அங்கத்தினர்களாக இருக்கவேண்டும். அப்படி இல்லாமல் பல யூனியன் களாக இருந்தால், ஜாயிண்ட் கௌன்சில் ஆப் மேனேஜ்மெண்ட் நடத்த முடியாது ; அப்பொழுது இதை ஏற்படுத்தினால் சிதறுண்டு கிடக்கும் தொழிலாளிகளினால் உற்பத்திப் பெருக்கம் ஏற்படாது.

SRI J. MATHA GOWDER : அப்படி பிளான்டேஷன் ஏரியாவில் தனியாக ஒரே யூனியனாக, பலம் பொருந்தியதாக இருந்தால், ஒரே தோட்டத்திலே அப்படி இருந்தால், இந்த முறையை அமுல் நடத்த பரிசீலனை செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த முறை மான்யுபாக்சரிங் இண்டஸ்ட்ரீஸ்க்குத்தான் ; ப்ளான்டேஷன் போன்ற தொழில்களுக்கு அமுல் நடத்த உத்தேசம் இல்லை.

SRI A. VEDARATHNAM : ஸிம்ஸன் கம்பெனியில் தொழிலாளிகள் பங்கு கொள்ளும் ஏற்பாடு அமுலுக்கு வந்ததிலிருந்து ஏற்பட்டிருக்கும் அனுபவம் எப்படி இருக்கிறது ? நிர்வாகம் எப்படி வேலை செய்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : அது மிகவும் திருப்தி கரமாகவே இருக்கிறது என்று அந்த நிர்வாகஸ்தர்களும், தொழிற் சங்க அங்கத்தினர்களும் சொல்லுகிறார்கள் ; உற்பத்தி கணிசமான அளவில் அதிகரித்திருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஸிம்ஸன் கம்பெனியிலும் தொழி லாளிகள் மத்தியிலும் பல தொழிற் சங்கங்கள் இருந்த போதிலும், இது போன்ற முறையை அமுலாக்கப் படுகிறது. ஆகவே . . . .

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் சொல் லும் விவரம் தவறு. அதனால் " ஆகவே . . . " என்ற க்வெஸ்சின் எழவி . .

**Sri V. K. KOTHANDARAMAN** : பல தொழிற் சங்கங்கள் இருந்தாலும், மெஜாரிடி சங்கத்தின் பிரதிநிதித்துவத்தைக் கொண்டு, அந்த அடிப்படையில், இந்த முறையை அமுலாக்க முயற்சி எடுக்கப்படுமா என்று அறிய விருட்டுகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN** : அந்த விதமான திட்டத்தை கனம் அங்கத்தினர் இந்தப் பதவிக்கு வரும்போது உருவாக்கலாம். இன்றைக்கு இருக்கும் நடைமுறையில் பல சங்கங்கள் இருந்தால், ஜாயின்ட் கௌன்ஸில் நடத்த முடியாது. அப்படிச் செய்தால் போட்டியும், சண்டையும்தான் வளரும். உற்பத்தி அதிகரிப்புக்குப் பதிலாக, சண்டைதான் நன்றாக வளரும். ஆகவே அப்படி அமுல் நடத்த முடியாது.

**Sri T. S. RAMASWAMY** : கிரோம்பேட்டையிலுள்ள ட்ரான்ஸ்போர்ட் ஒர்க்ஷாப்பில் இந்த முறை அமுல் நடத்தப்பட்டதா ? என்ன அனுபவம் அங்கே ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : கிரோம்பேட்டையில் அமுல் நடத்த சில முயற்சிகள் செய்தோம். அதற்குள்ளே, அங்கே ஸ்ட்ரைக் ஏற்பட்டது ; சுமுகமான உறவு இல்லாததால் இந்த ஏற்பாட்டைச் செய்ய முடியவில்லை.

**Sri J. MATHA GOWDER** : ஸார், சென்ற வருஷ பட்ஜட் உரையில் கனம் நிதி அமைச்சர் தொழில் சங்கங்கள் பங்கு கொள்ள முன் வந்தால், அதை வரவேற்று உதவி செய்வோம் என்றார்கள் ; இப்பொழுது தொழில் அமைச்சர் ப்ளாண்டேஷன் ஏரியாவுக்கு விஸ்தரிக்க சர்க்கார் முன் வரவில்லை என்கிறார்கள். ஆகவே, அரசாங்கத்தின் கொள்கைகள் என்ன என்று திட்டவட்டமாகச் சொல்ல முடியுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இந்த இரண்டு அமைச்சர்களும் சொன்னது வேறு வேறு கருத்துக்கள். கம்பெனிகளில் தொழிலாளிகள் பங்குதாரர்களாக தங்கள் சேமிப்பைப் போடவேண்டும் என்றது நிதி அமைச்சரின் கருத்து ; பணம் வாங்குகிறீர்கள் வெவ்வேறு துறைகளில், போனஸ் பணம் முதலியவை ; அவற்றை சேமிப்பாகப் போட்டு பங்குதாரர்களாக வாருங்கள் என்ற உயர்ந்த லட்சியத்தைச் சொன்னார்கள் அவர்கள். நான் சொல்லுவது, ஜாயிண்ட் கௌன்சில் ஆப் மேனேஜ்மெண்ட், நிர்வாகத்தை நடத்துவதில், தொழிலாளிகளும், முதலாளிகளும் கலந்து ஆலோசித்து, எந்த விதமான நிர்வாகம் இருக்க வேண்டும், எதனால் உற்பத்திப் பெருக்கம் ஏற்படும் என்ற முறையில் செய்ய வேண்டும் என்ற கருத்து. எஞ்ஜினியரிங் இண்டஸ்ட்ரீஸ், மான்யூபாக்சரிங் இண்டஸ்ட்ரீஸ்களில்தான் இதை நன்றாகச் செய்ய முடியும். ப்ளாண்டேஷன்களில் செய்வது சுலபமில்லை. அந்த அபிப்பிராயம் ராஜ்ய சர்க்காருக்கு இல்லை என்று சொன்னேன்.

**Sri A. VEDARATHNAM** : ஸார், கனம் அமைச்சர் கூறிய பதிலிலிருந்து, இந்த முறை அனுபவத்தில் நன்றாக வேலை செய்வதாகவும், சுமுகமான உறவு நிலவுவதாகவும், உற்பத்தி பெருகுவதாகவும் சொன்னார்கள். ஏன் இந்த முறையைக் கொண்டு வர, ஒரு தொழில் ஸ்தாபனத்தில் ஒரே சங்கம்தான் இருக்க வேண்டும், தொழிலாளிகள் ஒரே சங்கத்தில்தான் ஈடுபடவேண்டும் என்று ஏன் செய்யக்கூடாது ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : அது தொழிலாளிகள் செய்ய வேண்டிய விஷயம். அதைச் சட்ட பூர்வமாகச் செய்ய சர்க்காருக்கு உத்தேசம் இல்லை.

**Sri V. K. KOTHANDARAMAN** : எழுபத்தைந்து பர்சண்டுக்கு மேல் தொழிலாளிகளை அங்கத்தினர்களாகக் கொண்ட சங்கமாக இருந்தால், அது போன்ற தொழில்களில் இந்த முறையை அமுலுக்குக் கொண்டு வர முயற்சி எடுக்கப்படுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : It is a hypothetical question.

DEPUTY SPEAKER : Questions are over.